தந்திரம் 1:

உள் மூச்சும் வெளி மூச்சும் சந்திக்கும் புள்ளியில் நுட்பமாய் அந்த அனுபவம் உள்ளது. மூச்சை மிக மிக நுட்பமாய் கவனிக்கும்பொழுது பளிச்சென்று அந்த அனுபவத்தைப் பெறலாம்.

தந்திரம் 2:

உள்ளே செல்லும் மூச்சு வெளியே போவதற்கு திரும்பும் அந்த நுட்பமான இடைவெளியிலும் வெளியே வந்த மூச்சு உள்ளே செல்வதற்காகத் திரும்பும் அந்த நுட்பமான இடைவெளியிலும் பளிச்சென அதை நீ உணரலாம்.

தந்திரம் 3:

உள்ளே செல்லும் மூச்சு சக்திமயம்.வெளியே செல்லும் மூச்சு சிவமயம்.இரண்டுமூச்சும் முட்டிக்கொள்ளும் அந்த மையப்புள்ளியே சிவசக்தி மைம்.அந்த மையப் புள்ளியில்தான் நீ அந்த ஆனந்த லயத்தை பெறுகிறாய்.

தந்திரம் 4:

மூச்சை உள்ளே செலுத்தி நிறுத்துவது பூரண கும்பகம். மூச்சை வெளியேற்றி நிறுத்துவது சூனிய கும்பகம்.பூரண கும்பகம் சக்தி மயம். சூனிய கும்பகம் சிவா மயம்.இந்த இரண்டு கும்பகத்தில் நிறுத்தும்பொழுது மனம் சுயம் காணாமல் போகும்.ஒளியும் வெளியும் பிரகாசிக்கும்.மனத்தூய்மை இன்றி அதனுடன் போராடுவோர்க்கு இது வாய்க்காது.

தந்திரம் 5:

புருவமத்தியில் உள்ள புள்ளியே சாம்பவி.அங்கே கவனம் வை.எண்ணங்களை இழுத்துக்கொண்டு மனம் அசைவதை கவனி.சாம்பவியை ஊடுவி உன் மூச்சை உச்சியை நோக்கிச் செலுத்து.உச்சியின் வழியே ஒளி

மயமாய் உணர்வு உன்மேல் கங்கைபோல் பொழிவதை அனுபவி.

தந்திரம் 6:

இந்த அனுபவத்திற்கு பணக்காரன் ஏழை அறிவாளி மூடன் சிவப்பன் கருப்பன் உயர்ஜாதி கீழ்ஜாதி அந்த மதம் இந்த மதம் அந்த இனம் இந்த இனம் என்ற எந்த பேதமும் கிடையாது. எந்த பணியில் ஈடுபாடு இருந்தாலும் உள்மூச்சையும் வெளிமூச்சையும் கவனித்தபடி இரு.உறுதியாய் ஒருநாள் புதிய ஞானப்பிறப்பை நீ எடுப்பாய்.

தந்திரம் 7:

காட்சிக்கும் கருத்துக்கும் எட்டாதது உன் மூச்சுக்காற்று. அதை உணர மட்டுமே முடியும். நெற்றியின் மையத்திலிருந்து அது இதயத்தை நோக்கிப் பாய்ந்து கலஃபு எனப் பெறும் காலபைரவரின் மையத்தை பிரகாசப்படுத்தும். அந்த பிரகாசத்தை கனவுகளின் மீது பாய்ச்சினால் திரிகால ஞானி ஆவாய்.மரண அனுபவத்தின் மீது பாய்ச்சினால் என்னமாய் வெல்வாய்.

தந்திரம் 8:

உடையவன் மீது உள்ளார்ந்த அன்பு கோல். உடல் பொருள் ஆவியை ஒப்புவித்துவிடு.உடையவனே என் இரண்டு மூச்சுக்களுக்கும் இடையில் உள்ள நுட்பமான இடைவெளியில் உன் இன்ப மயமான இருப்பை எனக்கு உணர்ந்து என்று வேண்டியபடி தவமிரு. உடையவனாகிய உன்னவனை ஒளிமயமாய் உணர்வாய்.

தந்திரம் 9:

படுத்தவுடன் உடலை தளர்த்தி உணர்வற்ற சவம்போல் இரு.காலம் தாழ்த்தி வரும் கணவனை எதிர்பார்த்து ஆத்திரத்துடன் காத்திருக்கும் மனைவிபோல் ஈசனின்

வருகையாய் ஆத்திரப்படு.உறுஞ்சு.. உறுஞ்சு.. உறிஞ்சும் உணர்வாகவே மாறு.உறுஞ்சுதலின் எல்லையில் ஒளிமயம் ஆவாய்.

தந்திரம் 10:

ஆண்மலயம் மிக்க தன் துணையை அன்புடன் அனைத்திற்கும் பொழுது அவன் அரசனாக வேண்டும்.அவள் அரசியாக வேண்டும்.அந்த அன்பின் சுகத்தை, வெப்பத்தை, மின்சார உணர்வை,அழுத்தத்தை, இதத்தை, காலத்தை கடந்த பரிமாணத்தை ஆழ்ந்து அனுபவி.முடிவற்ற ஆனந்த வாழ்வு என்னும் எல்லைக்குள் பிரவேசி.

தந்திரம் 11:

உன் தலையில் .. பிடறியில் .. புருவ மையத்தில் .. முதுகுத்தண்டில் .. இதேபோல் எந்த இடத்தில் எறும்பு ஊர்வதைப் போன்ற உணர்வை நீ பெற்றாலும் அந்த உணர்விலேயே லயித்து பழகு. மற்ற புலன்களை அந்த நேரத்தில் மூடிவிடு. அந்த உணர்வு மறையும் வரை அந்த உணர்வுடனேயே இரு.

தந்திரம் 12:

நாற்காலியில் சாய்ந்திருக்கும் பொழுது படுக்கையில் படுத்திருக்கும் பொழுது உன்னை எடையற்றவனாய் பாவித்து பழகு. மனத்தின் கனம்தான் உடலின் கனம். உடலின் கனத்தை இழக்க இழக்க மனத்தின் கனத்தை இழப்பாய்.மனமற்ற வெட்டவெளி அனுபவத்தை பெறுவாய்.

தந்திரம் 13:

நிறங்கள் ஓர் ஐந்துடையான் என்ற மறைமொழிக்கிணங்க மயில் தொகையின் ஐந்து வண்ணங்களையும் இந்து புலன்களாய் கற்பனை செய். ஐந்து வண்ணங்க

ளும் உன் ஐம்புலன்களும் விஸ்வரூபம் கொள்ளட்டும். அண்டசராசரத்தை உலா வரட்டும். முடிவில் உன்னுள் ஒரு புள்ளியாய் ஒடுங்கி கரையட்டும் கலாப ஞானம் தந்து கரையட்டும். ஸ்ரீ முருகன் அடைந்த ஞானம் இது. வானத்திலோ, வெறும் சுவற்றிலோ நீ காணும் புள்ளி கரையும் வரை பார்த்தால் மனமற்ற வெற்றிடத்தை அடைவாய்.வெற்றிடம்தான் வெற்றியின் இடம்.

தந்திரம் 14:

முதுகுத்தண்டின் மத்தியில் தாமரையின் தண்டுபோல் அமைந்திருக்கும் மென்மையான நரம்புத்தொகுதியின் மேல் உன் முழு கவனத்தை வை. பிரம்ம கிரந்தி .. விஷ்ணு கிரந்தி .. ருத்ர கிரந்தி என்னும் மூன்று வாசல் களையும் திறந்து அது உன்னை உச்சிக்கு இட்டுச்செல் லும். மறுபிறப்பு எடுப்பாய்!

தந்திரம் 15:

கண்கள் இரண்டு .. காதுகள் இரண்டு .. மூக்குத்துளை கள் இரண்டு .. வாய் ஒன்று. ஆகா ஏழு துவாரங்களை கைவிரல்களினால் மூடியபடி கவனி.உன் கண்மணியில் ஓர் ஒளி அனுபவத்தையும் வெளி அனுபவத்தையும் உணர்வாய்!

தந்திரம் 16:

ஈசனை நேசிப்பவன் ஆசிர்வதிக்கப்படுவான்.அப்பொ ழுது அவனது புலன்கள் ஐந்தும் இதய ஒளி எனப்பெறும் கல்ஃபு பிரகாசத்தால் ஈர்க்கப்பெற்று ஒடுங்கும்.இதயக் கூட்டின் உச்சியாகிய தாமரை மையத்தை அடைவாய். ஆனந்த மலர்ச்சி பெறுவாய்!

தந்திரம் 17:

கால்களை பத்மாசனம், சித்தாசனம்போல் ஆசனத் தில் காட்டுகிறாய்.கண்களை சம்பவியில் வைத்து மூடு

கிறாய்.காதுகளை பரநாதத்தில் காட்டுகிறாய்.நாக்கை கேசரி முத்திரையில் சுருட்டி வைக்கிறாய்.அதுபோல் மனத்தை எண்ணமற்ற மையத்தில் கட்டி பழகு .மனத்தை நடுநிலை என்னும் மையத்தில் நிறுத்தியவன் மாயவனாகிய மன்னவனை அடைவான்!

தந்திரம் 18:

ஏதேனும் ஓர் உயிர்ப் பொருளையோ, ஜடப் பொருளையோ அன்புடன் பார்.அருகிலிருக்கும் எந்த பொருளுக்கும் கண்களை தாவவிடாதே.பூரண அன்புடன் ..பார்க்கும் பொருளுடன் ஆழ்ந்துவிடு .பார்க்கும் அந்தப் பொருளை ஊடகமாக பயன்படுத்தியே நீ ஆசிர்வதிக்கப்படுவாய்!

தந்திரம் 19:

கைகளின் துணையின்றியும் பாதங்களின் துணையின்றியும் புட்டத்தில் மட்டும் உட்கார்ந்திரு.திடீரென்று உன் மூலாதாரம் விழிப்பு நிலைபெற்று உச்சியை நோக்கி உயர்வதால் நீ ஞான மலர்ச்சி பெறுவாய்.உன் மூல வித்து விழிப்படைந்து முளைத்து வளர தொடங்கிவிட்டால் அதன் வளர்ச்சியை தடுக்க முடியாது!

தந்திரம் 20:

ஓடும் வண்டியின் சீரான ஆட்டத்தில் லயித்தும்.. சீரான சத்தத்தில் லயித்தும் மனா ஒருமை அடைந்து மனமற்ற நிலைக்கு சென்று ஞான விழிப்பை பெறலாம். ஓடி நின்ற வாகனத்தின் திடீர் அமைதியில் கண்ணிற்குள் நிழலாடும் சிறு சிறு வளையங்களின் சுழற்ச்சியில் லயித்தும் அந்த பரவச நிலையை அடையலாம்!

தந்திரம் 21:

உன் தேகம் முழுவதும் அமிர்த தாரையால் நிரப்பப்பெற்று நீ வாழ்வை சுவைக்க சுவைக்க மீண்டும் மீண்

டும் நிரப்பிக்கொன்டே உள்ளது.தேகத்தின் எதோ ஒரு புள்ளி முள்ளலோ , ஓசையினாலோ குத்தி கிழிக்கப் பட்டால் அந்த சிறு துவாரத்தின் வழியே அமிர்த தாரை கசிவதே வேதனையாக உணரப்பெறுகிறது. அந்த வேதனை துவாரத்தில் லயித்து .. உள்ளே நுழைந்தும் கூட அந்த விழிப்புணர்வைப் பெறலாம்.சில யோகியர் புருவ மத்தியில் ஊசியால் பச்சை குத்தி அந்த வேதனை உணர்வை இதமாய் அனுபவித்த வண்ணம் ஞான விழிப்பை அடைந்துள்ளனர்!

தந்திரம் 22:

சிறு வயதிலோ கடந்த காலத்திலோ நீ வாழ்ந்த இடத் திற்குச் சென்று பழைய நினைவுகளை அசைபோடும் தருணத்தில் அப்படியே ஆழ்ந்து செல். உன் உடம்பும் மனமும்கூடப் பழைய கால சூழ்நிலைக்கு மாறிவிடும். ஆதியில் நீ பயன்படுத்திய பொருள் .. வீடு .. மரம் என எதுவேண்டுமானாலும் உன்னை மனிதனாக மாற்றிவிட வாய்ப்புண்டு.ஞான மலர்ச்சி தர வாய்ப்புண்டு!

தந்திரம் 23:

உனக்கு எதிரே உள்ள ஏதேனும் ஒரு பொருளை ஆழ்ந்து கவனி.அந்தப்பொருளைத்தவிர சுற்றியுள்ள மற்ற எல்லா பொருள்களும் போய்விட்டதாக கருது.கவ னித்தாள் உச்சத்தில் நீ பார்க்கும் பொருளையும் விட்டு விடு.பிற பொருள்கள் இல்லாமல் போய்விட்டதாக கரு தும் உணர்வையும் விட்டுவிடு.தூய வெளி நிலையை அடைவாய்!

தந்திரம் 24:

யாரோ ஒருவருக்கு எதிராக அல்லது யாரோ ஒருவ ருக்கு ஆதரவாக ஓர் உணர்ச்சி உனக்குள் எழுந்தாலும் .. அவ்வாறு எழும் எண்ணம் பிறரால் தூண்டப்பெற்றாலும் உடனே அந்த உணர்வை உரிய நபரின் மீது செலுத்தா

தே.மனதை நடுநிலை படுத்திக்கொள். உன் மையத்தில் சலனமின்றி இருக்க பழகு.ஞான மலர்ச்சி அடைவாய்!

தந்திரம் 25:

எதாவது ஒரு செயலை செய்யவேண்டும் என்ற உந்துதல் ஏற்ப்பட்டு அதை செய்ய முயலும் பொழுது திடீரென்று அதை செய்யாமல் நிறுத்து. ஏதேனும் ஒரு செயலை ஆர்வமுடன் செய்யும்பொழுது திடீரென்று அதை செய்யாமல் ஸ்தம்பித்து நின்றுவிடு.இத்தகைய ஸ்தம்பன யுக்தியிலும் பலருக்கு சுயம் பிரகாசம் தோன்றும்!

தந்திரம் 26:

ஏதேனும் ஒரு ஆசை வெள்ளம் போல் பொங்கி வரும் பொழுது அதன் வேகத்தை கவனி.உடலும் மனமும் எந்த அளவிற்கு எந்த அளவிற்கு அந்த ஆசையை அனுபவிக்க தயார் நிலையில் உள்ளன என்பதை ஆழமாய்க்கவனி.திடீரென்று அந்த ஆசையை தூக்கி வீசி விட்டு வெளியே வா. மனதை ஸ்தம்பிக்க வை!

தந்திரம் 27:

உன் சக்தியெல்லாம் வெளியேறும் வரை கால் போன போக்கில் சுற்றி சுற்றி வா.இனிமேல் ஒரு அடிகூட எடுத்துவைக்க இயலாது என்ற நிலையில்.. களைப்பின் உச்சத்தில் அப்படியே ஸ்தம்பித்து நிலத்தில் விழு.உடலின் ஒவ்வோர் அணுவும் துடிப்பதை முழுமையாக கவனித்த வண்ணம் முழு விழிப்பு நிலையில் இரு!

தந்திரம் 28:

உன் வலிமையை எல்லாம் சிறிது சிறிதாக இழந்துகொண்டு வருவதாக கருத்திக்கொள்.உன் அறிவும் சிறிது சிறிதாக மங்கிக்கொண்டு வருவதாக கருத்திக் கொள்.உன் ஆற்றலையும் அறிவையும் இழந்துநிற்கும்

அந்த நிராதரவான நிலையை ஆழமாய் உணர்ந்தபடி கடந்து செல்!

தந்திரம் 29:

எந்த எதிர்பார்ப்புமற்ற குழந்தைத்தனமான பக்தியை பழகிக்கொள்.இறைவன் மீது என்றில்லை.நாள்தோறும் நீ பயன்படுத்தும் பொருள்களை பக்தியுடன் கையாளலாம். சூரியன் சந்திரன் பூமி தாவரங்கள் என எல்லாவற்றின் மீதும் பக்தி கொள்.உரிமை உணர்ச்சியுடன் அவற்றைப்பார் , பழகு. பக்தி உன்னை விடுதலை செய்யும்!

தந்திரம் 30:

இரக்கமின்றி தளர்வாய் ஏகாந்தமாய் அமர்ந்துகொள். கண்களை மூடிக்கொண்டு உன் மனதின் துணையுடன் உன் உள் உறுப்புகளை உச்சந்தலைமுதல் உள்ளங்கால் வரை அணுஅணுவாய்க் கவனி.உனது உள் இருப்பையும் உள் உறுப்புகளையும் ஆராய்ந்தால் உன் உண்மையான உடல் மற்றும் மனா இயல்பை உணர்ந்து கொள்வாய்!

தந்திரம் 31:

சாதாரண ஒரு முழு கிண்ணத்தை முழுமையாக பார். அதன் ஓரங்களையோ என்ன உலோகம் என்பதையோ ஆராய்ச்சியாய்ப் பார்க்காமல் வெறுமனே பார்.நீண்ட நேரம் பார்க்க பார்க்க புதிய புதிய தோற்றமாய் மாறுவதைப்போல் உணர்வாய்.திடீரென்று நிகழ்கால விழிப்பு நிலைக்கு வா. அதுகூட உனக்கு பிரபஞ்ச விழிப்புணர்வை தோற்றுவிக்கும்!

தந்திரம் 32:

ஓர் அழகான நபரை முதன்முறையாகப் பார்க்கும்பொழுது ஏத்தனை வியப்புடன் .. புத்துணர்ச்சியுடன் .. குழந்தைத்தனமாய் பார்க்கிறாய். நீ நாள்தோறும் பார்க்கும்

சாதாரணப் பொருளையும் முதன் முறையாகப் பார்ப்ப துபோல் வியப்பாய் பார். புத்துணர்ச்சியுடன் பார். குழந் தைத்தனமாய் பார்!

தந்திரம் 33:

தவழ்ந்து செல்லும் மேகங்களைத் தாண்டி பறந்து நிற் கும் நீளவானத்தைப் பார்.வெறுமனே பார்.முடிந்தவரை இமைக்காமல் பார்.மோரில் திரண்ட வெண்ணைபோல் நீயும் அந்த நீளவானத்தால் திரட்டப்பட்ட உணர்வை பெறு.ஆழ்ந்த .. அமைதியான .. ஏகாந்தத்திற்குள் நுழை வாய்!

தந்திரம் 34:

எப்போதாவது உன் அறிவுக்கு எட்டாத ஆழ்ந்த அனுபவ உண்மைகளை யாரேனும் உபதேசிப்பதைக் கேட்க நேர்ந்தால் நிலை குத்திய கண்களுடன் ஆழமாய் .. கூர்மையாய்க் கேள்.உபதேசிப்பவரின் அந்த அனுபவ அலை உன்னுள் பாய நீ பளீர் என முழு விடுதலை உணர்வை அடைவாய்!

தந்திரம் 35:

ஆழமான கிணற்றின் விளிம்பில் நின்று அல்லது ஆழமான பள்ளத்தாக்கின் விளிம்பில் நின்று அந்த ஆழத்தை அணு அணுவாய் பார்.வியப்பும் பய உணர் வும் மாறி மாறிப் போட்டி போட்டுக்கொண்டு தோன்றும். பயம் கறையட்டும்.. ஆச்சரியம் நிலைக்கட்டும்! ஆழம் நிறைந்த அந்த ஆச்சர்யம் ஆழமான ஞானத்தை மலர வைக்கும்!

தந்திரம் 36:

ஏதேனும் ஒரு பொருளின் மேல் உன் பார்வையை செலுத்து.அந்த பொருளை பற்றி சகல எண்ணங்களும் உற்பத்தி ஆகட்டும்.பின்பு படிப்படியாக அந்தப் பொரு

ளிலிருந்து உன் பார்வையை திரும்பப்பெறு.படிப்படியாக அந்தப் பொருள் பற்றி எழுந்த எண்ணங்களையும் திரும்பப்பெறு! அமிதா தாரையாய் விளங்கும் என் தேவி! செல்லமே! இதுவரை மூச்சின் வழியே .. அன்பின் வழியே .. ஸ்பரிசத்தை வழியே .. ஸ்தம்பன யுக்தியின் வழியே .. வியப்பின் வழியே .. இவை போன்ற பல்வேறு வழிகளில் எப்படி ஒரு மனிதன் முழு ஞான விழிப்பு நிலையை எய்தலாம் என்பதை தெரிவித்தேன். என்னும் ஓசையின் வழியே...உடலுறவு என்னும் இன்பத்தின் வழியே...தூக்கத்தின் வழியே தும்மல், கொட்டாவி என்னும் உடலின் வெளிப்பாடுகள் வழியே கூட ஞான மலர்ச்சியை ஒருவன் அடையலாம் என்பதை இனி படிப்படியாய் தெளிவு படுத்துகிறேன்.கேட்டுக்கொள்!

தந்திரம் 37:

உணர்வுகள் ஓசைகள் ஆயின.ஓசைகள் ஒழுங்கு பட்டு மொழிகள் பிறந்தன.மொழிகள் வரிவடிவம் பெற்று எழுத்துக்கள் ஆயின. ஒரு மொழியின் எழுத்துக்களைக் கற்பனை செய்.அப்படியே எழுத்துக்களின் ஒலி வடிவங்களை கற்பனை செய். ஒலி வடிவங்களையும் நுட்பமாக்கி உணர்வுகளாக மாற்றி கற்பனை செய். முடிவில் உணர்வுகள், ஒலிகள், எழுத்துக்கள் என அத்தனை அம்சங்களையும் ஒதுக்கிவிட்டு ஆழ்ந்த அமைதியில் விடுதலை ஆகு!

தந்திரம் 38:

பல்வேறு ஓசைகளின் மையத்தில் இரு. ஓசைகள் அருவிபோல் உன்மீது பொழியட்டும். கடலின் அலையோசை... மரங்களின் இலைகள் அசையும் ஓசை... சந்தைக்கடை ஓசை... என சகல ஓசைகளையும் உலர்ந்த உணர்வுடன் அசைவின்றிக் கேள். கைவிரல்களால் செவிகளை மூடி கும்ம் என்று இந்தப் பேரண்டம் தானாக

எழும்பிக் கொண்டிருக்கும் பரநாத ஓசையினையும் கேள்!

தந்திரம் 39:

ஓம்ம்... என்பதைப்போல் ஏதேனும் ஒரு மந்திர ஒளியை மென்மையாய் உச்சாடனம் செய்.பேரண்டத்தின் இயற்கையான ஓசையுடன் கலந்து அந்த ஒளியைத் தவிர வேறு ஒளி இல்லை என்று நிறைந்த நிலையை அது அடையும். நீயும் நிறைவுற்று அந்த மந்திரமயம் ஆகு!

தந்திரம் 40:

ச..ரி..க..ம..ப..த..நி.. என்பதுபோல ஏதேனும் ஒரு எழுத்தை உச்சரிக்கத் தொடங்கி அதை அப்படியே சன்னமாக்கி... மென்மையாக்கிக்கொண்டே வா. முழுமையாய் கரைந்து அது மென்மையாகித் தேய்ந்த நிலையில் விழிப்புநிலையை அடைவாய்!

தந்திரம் 41:

வீணை.. தம்பூரா போன்ற ஏதேனும் நரம்பிசையை கேட்க நேரும்பொழுது அந்த ஓசையின் அடி நாதத்தில் ஆழ்ந்துபோ.அந்த நாதத்தின் நெளிவு சுழிவுகளில் நிறைந்து செல்.நரம்பிலிருந்து வெளிப்பட்டாலும் எங்கும் நிறைந்து கரையும் ஓசையைப்போல் நீயும் நிறைந்து கரைந்து போ!

தந்திரம் 42:

ஏதேனும் ஓர் ஓசையை முதலில் நன்கு கேட்கும் அளவுக்கு உச்சாடனம் செய்.பின்பு கொஞ்சம் கொஞ்சமாக ஓசையை குறைத்துக்கொண்டே வா .ஆழ்ந்த மௌனத்தின் ஓசையைக் கேட்கும் அளவுக்கு உன் மனம் ஒடுங்கி ஒத்திசைவு கொள்ளட்டும்!

தந்திரம் 43:

வாயை சற்றே திறந்துவைத்துக்கொள்.கண்களை மென்மையாக மூடிக்கொள்.மனதை நடுநாக்கில் லயிக்க வை.மூச்சு மௌனமாய்...ஹு என்ற பாவையு டன் உள்ளே நுழைவதை உணர்ந்த வண்ணம் அந்த லயத்திலேயே இரு !.. வ்வ்சி வசம் ஆகும் !..

தந்திரம் 44:

ஓம்... என்பது ஆதி ஒலி.அ...உ.... ம் என்னும் முத்தொழி லையும் நிகழ்த்தும் அந்த ஒலியில் "அ" என்ற ஒலியை யும் "ம்" என்ற ஒலியையும் நீக்கிவிட்டு "உ "... என்ற நடு ஒலியில் மையம் கொள்!

தந்திரம் 45:

"அஹ்" என்று முடியும் ஏதேனும் ஒரு மந்திரச்சொல்லை மௌனமாய் உச்சாடனம் செய்.பிறகு "ஹ்" என்ற ஒளியை மட்டும் மௌனமாக்கு.முயற்சியின்றி வெளிப் படும் இயற்கையாக மாற்று.உனக்குள் அந்த மின் அதிர்வை உணர்வாய்!...

தந்திரம் 46:

செவிகளை குரல்வளையை நெருக்கி அழுத்துவதன் வழி காதில் "விங்" என்ற ஒலி வருமாறு மூடிக்கொள். கூடவே குதத்தை இறுக்கி அதாவது அஸ்வினி முத் திரையை பிடித்து மூடிக்கொள்.அசைவற்ற நிலையில் செவியில் ஒலிக்கும் பரநாதத்தில் லயமாகு!...

தந்திரம் 47:

ஒவ்வொருவருக்கும் அவரவர் பெயரே மிக சிறந்த மந்தி ரமாய் பயன்படும்.உனது பெயரை மௌனமாய் மந்திரம் போல் உச்சாடனம் செய்.உனது பெயர் அதன் அர்த்தத் தையும் அது உன் பெயர் என்ற உணர்வையும் இழந்து வெறும் ஓசையாக மாறும்பொழுது நீ ஞான விடுதலை பெறுவாய்!

தந்திரம் 48:

உள்ளவற்றுள் உயர்ந்த பேரின்ப லயப்பயிற்சி ஓர் ஆணும் பெண்ணும் ஆன்ம லயத்துடன் கொள்ளும் உடலுறவு.கலவியின் தொடக்கத்தில் தோன்றும் அதே ஆர்வம்... அதே உணர்வு... அதே வெப்பம்... அதே வேகம் மாறாமல் பார்த்துக்கொள். ஆண்... விந்து வெளியேற் றம் பற்றி சந்திக்கவே கூடாது. இருவருக்கும் இடையே வட்டமாய் ஓர் ஆனந்த மின்சுழற்சி ஏற்படும்.அணை யாத தணலாய்த் தகித்தப்படி இருவரும் மணிக்கணக் கில் இருங்கள்!...

தந்திரம் 49:

கலவியின் பொழுது ஏற்படும் மின்சார உணர்ச்சி உட லின் ஒவ்வோர் அணுவிலும் பரவ வேண்டும்.காற்று வீசும்பொழுது இலைகள்... தண்டுகள்... காய்கள்... குலுங்குவதுபோல் உன் ஒவ்வோர் அங்கமும் குலுங்க வேண்டும்.முக்கல்... முணகல்... கூச்சல் என தம்பதியா சுகத்தின் வெளிப்பாடு எதையும் அழுத்தி வைக்காதே. முழுமையாய் வெளிப்படுத்து.உடல்... மனம்... ஆன்மா என்னும் மூன்று நிலைகளிலும் மலர்ச்சி பெறுவாய்!...

தந்திரம் 50:

கலவியின் பொழுது அனுபவிக்கும் இன்ப உணர்வு என்பது அண்டசராசரத்தில் நிரம்பி இருக்கும் ஓர் அதிர் வின் மின்னல் வருகையை (Lightning Flash).ஆரம்ப நிலையில் அந்த உணர்வைத் தன உடலுக்குள் ஈர்த்து ஆற்றலைப் புதுப்பித்துக் கொள்ள ஆணுக்கு ஒரு பெண்ணும் ,பெண்ணுக்கு ஒரு ஆணும் ஊடகமாய் (Medium) பயன்படுகிறார்கள். உடல் உறவில் இருவ ருக்குமிடையே சிறிய வட்டமாய் தோன்றும் மின்சுழற்சி... படிப்படியாய் அவர்கள் பிரிந்து தனித்தனியே வெகு தூரத்தில் இருந்தாலும் பெரிய வட்டமாய் அவர்களுக்

கிடையே சுழலத்தொடங்கும்.நிறைவில் பெண்ணுக்கு அண்டமே ஆணாக உதவும்.ஆணுக்கு அண்டமே பெண்ணாக உதவும்.எதிர்பாலின உறவின்றி ஏகாந்த சுழற்சியைப் பேரின்பமாக உணரலாம்.காலத்தை வெல் லலாம்!...

தந்திரம் 51:

ஆனந்தம் என்பது உன் ஆன்மாவின் மையத் தில் உறைந்து கிடைக்கும் ஓர் ஊற்று.அந்த ஊற்று பீறிட்டு வெளிப்பட புறத்தே ஒரு தூண்டல் தேவை. நீண்ட காலத்திற்குப் பிறகு தற்செயலாகச் சந்திக்கும் ஆத்மார்த்தமான உன் தோழியோ, தோழனோ அதை வெளிப்படுத்தலாம்.ஏக்கத்துடன் காத்திருந்து சந்தித்த உன் காதலனோ காதலியோ வெளிப்படுத்தலாம்.கடுங் குளிரின் பொழுது கதகதப்புடன் வெளிப்பட்ட சூரியன் கூட அதை வெளிப்படுத்தலாம். ஆனந்தம் வெளிப்பட உதவிய தூண்டலின்மீது அதிக கவனம் வைக்காதே.எ ழுந்து கூத்தாடும் அந்த ஆனந்த உணர்விலேயே லயப் படு.அப்பொழுது தான் உலக வாழ்வு என்பதே இறை உணர்வை வெளிப்படுத்த உதவும் ஊடகம் என்பதை உணர்வாய்!

தந்திரம் 52:

உண்ணும் உணவை ...குடிக்கும் பானங்களை...சுவைக் கும் தின்பண்டங்களை இயந்திரமாய் உண்ணாதே. கண்களை மூடி உமிழ்நீரில் அந்த பண்டத்தைப் பூரண மாய்க் குழைத்து அந்த சுவையாகவே மாறிவிடு.நஞ்சை யும் அமுதாகும் சக்தி சுவையுடன் தன்வயம் ஆவதில் தான் உள்ளது.உன் நாக்கிற்கு தகுந்த சுவையை எதிர் பார்க்காதே. சுவைக்கு ஏற்ப உன் நாக்கை லயப்படுத்தி அந்த சுவையாகவே மாறி கரைந்து விடு!

தந்திரம் 53:

தாமரை கண்களால் என்னை தழுவும் தேவி!.. மல ரின் தீண்டலைப் போன்றது உன் தேகம்... தேனாய்க் குழைத்து செவியில் அமுதமாய் நிறைவது உன் சொல் லின் ரீங்காரம்!... இதுபோல் ஒவ்வொருவரும் தன கண் களை... தன தேகத்தின் மென்மையை... தன குரலை ... தான் சுவைக்கும் சுவையை மொத்தத்தில் தன இருப் பைத் தானே ரசித்து பழகினால் வாழ்வு பூரணமாகும். முடிவற்ற வாழ்வாகவும் மாறும்.வாழ்வு முடிவற்றதானால் அதற்க்கு உதவும் தேகம் உட்பட சகலமும் முடிவற்றதா கும்!...

தந்திரம் 54:

எந்த செயலை செய்தாலும் அதில் நிறைவு... திருப்தி என்ற ஒரு மையம் தோன்றுவதை கவனி.கடுந்தகம்... தண்ணீர் குடித்தவுடன் திருப்தியில் முட்டும்.கடும்பசி... உணவை சுவைத்தவுடன் திருப்தியில் முட்டும்.பொங் கும் காமம் பூரணமான கலவியின் நிறைவில் பொய் முட் டும்.எந்த ஒரு செயலிலும் திருப்தி என்ற மையத்தை கண்டுபிடித்து அந்த திருப்தி உணர்வுக்குள் ஆழ்ந்து சென்று ஏகாந்தமாகும்!...

தந்திரம் 55:

உள்மூச்சுக்கும் வெளிமூச்சுக்கும் இடையே ஒரு மையப்புள்ளி இருப்பது போல உறக்கத்திற்கும் விழிப் பிற்கும் இடையே நுட்பமான நடுநிலை(Neutral) மையம் ஒன்று உண்டு. அந்த அணுவளவு மையத்தை அனுப வித்தாலும் பூரண ஞான மலர்ச்சி பெற முடியும்.படுக்கை யில் படுத்து உறக்கத்திற்காகக் காத்திருக்கும் வினாடி களே மிக நுட்பமாகக் கவனித்தபடி இரு.விழிப்பிலிருந்து உறக்கத்திற்கு மாறும் அந்த கணப்பொழுதில் உறக்கமு மற்ற விழிப்புமற்ற சுய தரிசனத்தை உணரலாம்!...

தந்திரம் 56:

உலகம் ஒரு ஐம்பூத மாயை.வானவில்லின் வண்ணங்களைத் தூரத்திலிருந்து தெள்ளத்தெளிவாகப் பார்க்கலாம்.அருகில் சென்றால் கரைந்து காணாமல் போகும்.நீ பார்க்கும் ஒவ்வொரு தோற்றமும் கணத்துக்கு கணம் மாறிக்கொண்டே இருக்கும்.ஐம்புலன்களால் நிஜத்தை தீண்ட முடியாது.கணத்தில் மறையும் கனவுகளையும் புலன்கள் நிஜம்போல் காட்டும்.கட்சியும் மாயை.காணப்பட்ட பொருளும் மாயை.காண்பவன் மட்டுமே நிஜம் என உணர்வதே சுய தரிசனம்!...

தந்திரம் 57:

ஆசை, கோபம் போன்ற அதீத உணர்வுகளை அமுக்கி வைப்பது சுலபம்.இரண்டையும் செய்யாமல் சாட்சி மந்திரமாய் அந்த உணர்வுகளைக் கவனிக்கும் மையப்புள்ளியில் நிற்கப் பழகு.அத்தகைய உணர்வுகளால் பாதிக்கப்பட மாட்டாய்.எதிர்செயல் செய்யமாட்டாய்.எஜமானால் எந்த சூழ்நிலையிலும் புன்னகையுடன் இருப்பாய்!...

தந்திரம் 58:

இப்பேரண்டத்தின் செயல்களே ஒரு நாடக மேடை விளையாட்டை போன்றதுதான். காட்சிகள் மாறிக் கொண்டே இருக்கும். வேடிக்கை பார்.உனக்குரிய பங்கை மட்டும் முழு ஈடுபாட்டுடன் செய்.நாடகத்தில் வரும் காட்சிகளைக் கண்டு உணர்ச்சி வயப்பட்டு அழுவதும் சிரிப்பதும் போன்றதே உலக வாழ்க்கை விஷயத்தில் ஈடுபட்டு நீ தவிப்பது!... வேடிக்கை பார்... ஞானமடைவாய்!...

தந்திரம் 59:

அன்புமயமான தேவி!... உலக வாழ்க்கை மூன்று பரிணாமங்களை உடையது.இன்பம்... துன்பம்... நடுநிலை! விருப்பு... வெறுப்பு... நடுநிலை! இவற்றுள் நடுநிலை என்ற மையம் தான் ஓய்வு மையம்... ஞான மையம்...

அமைதி மையம்... ஆண்டவனின் மையம்! மகிழியோடும் ஒட்டாதே ... தூக்கத்தோடும் ஒட்டாதே... நடுநிலைக்கு வந்துவிடு. ஈசனுடன் இருப்பாய்!...

தந்திரம் 60:

அஞ்ஞானி இரண்டு நியாயம் வைத்திருப்பான்.தனக் கென்றால் சாதகமான ஒரு நியாயம்.பிறர்க்கென்றால் வேறு நியாயம்.மகிழ்ச்சி... வேதனை... கோபம் போன் றவை எல்லோருக்கும் ஒரே மாதிரிதான் வரும்.தன் கோபம் நியாயமானது.பிறர் கோபம் அநியாயமானது. தான் தரும் தண்டனை நியாயமானது.பிறர் தனக்குத் தரும் தண்டனை அநியாயமானது.இப்படி, "தான் செய் ததுதான் சரி!" என்று நினைப்பவன் எல்லாம் அஞ்ஞா னி."எல்லோரும் அவரவர் நியாயப்படி சரி!" என்று தெளி பவன் ஞானி!

தந்திரம் 61:

பேரண்ட தத்துவம் அசைவற்றது.அதன் இயக்கமோ தொடர்ந்த அலை இயக்கம்.நீர் அலை அலையாய் பர வும்.தீப்பிழம்புகள் அலை அலையாய் கிளம்பும்.உன் வாழ்வும் விழுந்துகொண்டும் எழுந்துகொண்டும் இருக் கும் ஓர் அலை இயக்கம்தான்.சாட்சி மாத்திரமாய் நிலைத்து நில்.எழுவதையும் விழுவதையும் வேடிக்கை பார்.சமுத்திரமாய் உன்னை நினை.அலைகளை மறந் துவிடு.ஆனந்தமாய் ஆவாய்!

தந்திரம் 62:

பேரண்டத்தில் வேரூன்றி நிற்கிறது உன் மனம்.நீலவா னம் போல் ஆழ்ந்த அமைதியில் அசைவற்று நிற்பது அதன் இயல்பு.உன் ஆசை... கோபம்... வேதனை உள் ளிட்ட அத்தனை நல்லதும் கெட்டதுமான உணர்வுகள் மேகம்போல் வந்து செல்பவை. மனம் எங்கு அலைந்தா

லும் எப்படி அலைந்தாலும் உள்முகமாக நீ அசைவற் றிரு... நீளவானம்போல்!...

தந்திரம் 63:

பார்த்தல்... கேட்டல்... தொடுதல்... சுவைத்தல் எனப் புலன்களின் வழியே நீ அந்தச் செயலை செய்தாலும் அந்த உணவாக மாறிவிடு.புலன்கள் வெறும் கருவிகள் மட்டுமே.உணர்பவனாகிய நீ மட்டுமே உண்மை.முழு விழிப்புணர்வின்றி உன் தேகத்தின் எந்த உறுப்பை யும் பயன்படுத்ததே.புலன்கள் வாயிலாக மட்டும் பயன்ப டுத்தி உணர்வுடன் ஒன்றி இருப்பவனை யாரும் புலன் கள் வழியே நடித்து ஏமாற்ற முடியாது!...

தந்திரம் 64:

ஒரு தும்மலின் தொடக்கத்தில், கோட்டாவின் நடுவில், திகில் நிறைந்த சூழ்நிலையில்,ஆழ்ந்த கவலையில்,உ யிருக்கு அஞ்சி ஓடுகையில்,ஆழமான பிலத் துவாரத் தைப் பார்த்தவுடன் ஏற்படும் அதிர்ச்சியில்... இப்படி அதீ தமான... விபரீதமான எந்த உணர்ச்சி தோன்றினாலும் முழு விழிப்பு நிலையில் அந்த உணர்வைக் கவனி. உன்னை நீயே அழைத்து "பயந்துவிட்டாயா?" என்பது போல் கேள்.உணர்ச்சி வேறு நீ வீராக மாறி விடுதலை அடைவாய்!...

தந்திரம் 65:

பிரம்மம் என்னும் இருப்பு, இரண்டற்று ஒருமை நிலை யில் உள்ளது."புனிதம்... புனிதமற்றது" என்ற பேதம் பிரம்மத்திற்கு கிடையாது.அத்தனை பேதங்களும் மனித மனங்களால் உருவாக்கப்பெற்றவை.எந்த பொருளை யும் எந்த செயலையும் எந்த உயிரையும் உள்ளபடி ஏற் றுக்கொள்.ஒப்பீடு செய்யாதே.நல்லவை கேட்டவை என பேதப்படுத்ததே.உயர்நிலை அடைவாய்!...

தந்திரம் 66:

ஆன்மா என்னும் பிரம்மம் மராட்டிய தத்துவம் 'Constant'.தாய்தான் நான் என உணர்கிறாய்.ஆன்மா வைச் சுற்றி பின்னியுள்ள மனமும் உடலும் கணத்துக்கு கணம் மாறும் தத்துவம்.'Vary' குழந்தை... இளமை... முதுமை எனப் பருவந்தொறும் உடலும் மாறும்.மனமும் மாறும்.துணிந்தவனுடன் பழகும்பொழுது துணிச்சலாய் மாறும்... மனம் பயந்தான்கொள்ளியிடம் பழகும்பொ ழுது பயந்தான்கொள்ளியாக மாறும்.மாறாத பிரம்மத் தில் நிலைத்து நிற்பதே சுயம்பிரகாசம்.'Self realization' அவனே மாறாத பிரம்ம நிலையை அடைவான்!...

தந்திரம் 67:

அறிபவன் மட்டுமே மாறாமல் இருப்பவன்.அறியும் பொருள்... அனுபவிக்கும் உலகம் அத்தனையும் ஆற்று நீரின் ஓடம் போல் கணந்தோறும் மாறிக்கொண்டே இருக்கும்.மாறுகின்ற உலகத்தை பற்றியபடி போராடிக் கொண்டிருப்பவன் அஞ்ஞானி.மாறாத தத்துவமாகிய அறிபவனை இறுக்கமாய்ப் பற்றியபடி அசையாமல் நிற்ப வனே ஞானி.பார்ப்பானை பார்ப்பவனே பார்ப்பான்!...

தந்திரம் 68:

ஒரு கோழி அடைகாக்கும் தவத்தைச் செய்து குஞ்சு களை பெறுகிறது.தன சொந்த குஞ்சுகளுக்கு தாயாக திகழ்கிறது.அதுபோல் உன் சொந்த நிகழ்கால அனு பவங்களுக்கு ஆதரவு தரும் தாயாக இரு.கடந்தகால கனவும் வேண்டாம்.நிகழ்காலத்தையும் கனவுகண்டபடி அனுபவிக்கும் தன்மையும் வேண்டாம்.எதிர்கால நம் பிக்கை கனவுகளும் வேண்டாம்.நிகழ்கால இருப்பில் வாழ்பவனுக்கு மூன்று காலமும் உதவியாய் அமையும்!...

தந்திரம் 69:

நரகத்தை சிறைச்சாலை என்றும் சொர்க்கத்தை விடு தலை என்றும் கருத்தாதே.நரகம் மூடப்பட்ட சிறை. சொர்கம் ஒரு திறந்த வெளி சிறை.இரண்டிலும் சிக்கிக் கொள்ளாமல் யார் நிகழ்கால இருப்பை முழுமையாக அனுபவிக்கிறானோ அவனே பூரண விடுதலை பெற முடியும்.பணத்தையே நினைக்கும் பாமரனும் பணத் தையே தீண்டமாட்டேன் என்ற வைராக்யத்தில் இருக் கும் பரதேசியும் பணம் மாயைக்குள் சிக்கியுள்ளவர்களே தவிர விடுதலை அடைந்தவர்கள் கிடையாது!

தந்திரம் 70:

முதுகெலும்பின் இளமையும் சுறுசுறுப்பும்தான் ஒரு மனி தனின் சுறுசுறுப்புக்கு இளைமைக்கும் அடிப்படை.சக் தியை கீழுநோக்கி இழுக்கும் மூலாதாரம் தான் தொடக் கம்.சக்தியை மேல்நோக்கி இழுக்கும் உச்சிதான் முடி வு.உன் விந்து சக்தி,ஒளிக்கதிகளாக மேலே பாய்ந்து எழுவதாக கற்பனை செய்.ஆண்களின் பாலுணர்வு சக் தியை மட்டுமே கற்பனையால் உயரத்திற்கு ஏற்ற முடி யும்.உச்சியாகிய சஹஸ்ராரத்தை அது முட்டிவிட்டால் ஞானமடைவாய்!

தந்திரம் 71:

மூலாதாரத்தில் உள்ள விந்து சக்தி, மின்னல் பாய்வது போல் ஒவ்வொரு சக்கரமாக பாய்ந்து பாய்ந்து ஏறுவது போல் கற்பனை செய்து பழகு.ஒளிக்கதிர்கள் படிப்படி யாக மேலே ஏறுவதுபோல் கற்பனை செய்வது பெண் களுக்கு எளிதாகப் பயன்தரும். ஒளி-இருள்... ஒளி-இருள்... எனத் தாவி தாவி அது உயரே பாய்வதாக உணர்வது ஆண்களுக்கு எளிதாகப் பயன்தரும்!...

தந்திரம் 72:

உன் கனவுகளாலும் கற்பனைகளாலும் நீ கலைக்கப் பெற்றதால் வண்ண மயமான ஒளிக்கதிர்கள் (Aura)

உன்னை மிக அழகாக சூழ்ந்திருக்கும் அற்புதத்தை உணரத் தவறிவிட்டாய். கண்ணை மூடும்போதெல்லாம் உன்னை சுற்றி வெளிப்புறத்திலும் உட்புறத்திலும் வான வில்போன்ற வண்ணமயமான ஒளிக்கதிர்கள் ஊடு ருவி நிற்பதாக கற்பனை செய்.மிக எளிதில் ஒளிமயம் ஆவாய்!...

தந்திரம் 73:

கோடைகாலத்தில் மோகக் கூட்டங்கள் இன்றி எல்லை யற்ற வெளியாகக் காட்சி தரும் நிர்மலமான நீளவா னத்தை எந்த எதிர்பார்ப்பும் இன்றி ஏகாந்தமாய் பார். உன் மனமும் எல்லையற்ற வானவெளியாக விரிவடை யும்.கண்களிலிருந்து கண்ணீர் கசியும் வரை இமைக் காமல் பார்.தன்பாராம் அனைத்தையும் இறக்கி வைத் துவிட்டு மனம் வெட்டவெளி ஆகும்!

தந்திரம் 74:

சக்தி!... எல்லையற்ற இந்தப் பிரபஞ்சம் முழுமையும் உன் தலைக்குள் அடங்கி விட்டதாக கற்பனை செய்தால் கூட உன் மனம் காணாமல் போகும்.ஞான மலர்ச்சி பெறு வாய்.மல்லாந்து தளர்வாய்ப் படு.கண்களை மூடு.படிப்ப டியாக உன் தலையும் மனமும் விஸ்வரூபம் எடுக்கட் டும்.உன் அறையின் எல்லைகளைக் கடந்து... பூமியின் எல்லையைக் கடந்து... சூரிய மண்டலத்தைக் கடந்து விரிவடையும்.முடிவில் தலையே பிரபஞ்சமாய் மாறிவி டும்!...

தந்திரம் 75:

'விழிப்புநிலை... தூக்கநிலை... கனவுநிலை...' என்பன ஒரு மனிதன் பொதுவாய் இருக்கக்கூடிய மூன்று நிலை கள்.நான்காவது சிறப்பு நிலையே விழிப்புடன் தூங்கும் 'துரிய' நிலை. விழித்திருக்கும் பொழுது உன்னை ஒரு ஒளி வெள்ளமாகக் கருத்தியபடி செயல்படு.தூங்கும.

பொழுது ஒளியுடல் படுத்திருப்பதாய் பாவனை செய்.க னவின் பொழுதும் உன் ஒளி உடலை இழக்காதே.ப டிப்படியாய் உன் இருப்பு நான்காவது நிலையான துரிய நிலையை அடையும்.விழிப்பும் உறக்கமும் அற்ற ஒளி தேகம் பெறுவாய்!...

தந்திரம் 76:

ஈசனை ஒளியாக கருதித்தான் ஞானமும் விடுதலை யும் அடைய வேண்டும் என்பதில்லை.தூய இருளாக கருதித் தியானம் செய்தும் அடையலாம்.'நள்ளிருளில் நாட்டம் பயின்றாடும் நாதன்' என்னும் வரிகள் இதை உணர்த்தும்.மழைமேகம் சூழ்ந்த கும்மிருட்டில் விழித்த நிலையில் ஒளியே உள்ளே வராத அறைக்குள் தவம் செய்.மரண பயம் நீங்கி மலர்ச்சி அடைவாய்!

தந்திரம் 77:

நிலவு இல்லாத... கருமேகம் சூழ்ந்த... அமாவாசை போன்ற கும்மிருட்டைத் தேர்வு செய்.மல்லாந்து படு. கண்களை மூடி உனக்குள் அஞ்ஞான இருட்டை ஆழ மாய்ப் பார்.சில நிமிடங்கள் கழித்து கண்களை திற. வெளியில் உள்ள இருளைப் பார்.நாள்தோறும் இப்படி உள் இருக்கும் இருளை வெளி இருளில் கொட்டும் தியானத்தைச் செய்.நாளடைவில் உனக்குள்ளே இருள் அஞ்ஞான மருள் நிரந்தரமாய் அகலும்.வெளியிலுள்ள ஞான இருள் உன்னை நிரப்பும்.பகலும் இரவும் ஒன் றான நிலையை அடைவாய்!...

தந்திரம் 78:

உன் கவனத்தை கூர்மையாக்கு. மிக மிக நுட்பமாக்கு. ஜடப்பொருள் ... உயிர்பொருள் என எல்லாமே உன்னு டன் அதனதன் மொழியில் தொடர்புகொள்ளத்தொடங் கும்.காரணம், 'ஜடப்பொருள்... உயிர்பொருள்... கிரகங் கள்... நட்சத்திரங்கள்... தேவதைகள்... தெய்வங்கள்...'

எனச் சகல தத்துவங்களையும் தூண்டல் - துளங்கள் 'Stimulus-Respond' முறையில்தான் வடிவமைத்துள்ளோம். கவனத்தை நுட்பமாகிக் கேளுங்கள்.கொடுக்கப்படும்!...

தந்திரம் 79:

சுடுகாட்டில் பிணங்கள் எரியூட்டப்படுவதைச் சில நாட்கள் கவனி. உன் அறையில் மலர்ந்தபடி தளர்வாய் படு. உன் கால் விரல்களில் தொடங்கி ஒவ்வோர் அங்கமும் எரிந்து சாம்பலானதாய் கற்பனை செய்தபடி உச்சி வரை செல். உன் உடலும் மனமும் காணாமல் போகும். ஆன்மாவையும் உயிரையும் பிரிந்து உணரும் ஆற்றலை பெரு!...

தந்திரம் 80:

தன தேகம் எரிந்து சாம்பலாவதாகக் கற்பனை செய்யும் தந்திரத்தில் முழுத்தேர்ச்சி பெற்று அனுபவநிலை அடைந்துவிட்டால் முழு உலகமே பற்றி எரிந்து சாம்பலாவதாகக் கற்பனை செய்யும் தந்திரத்தைப் பயன்படுத்தலாம்.உன் தேகம் இந்த பூமியுடன்தான் தொடர்பு வைத்திருக்கிறது.பூமியும் எரிந்து எதுவும் இல்லாமல் போய்விட்டதாய் உணர்ந்தால் ஆன்மா பூமியுடனான தொடர்பை அறுத்துவிடும்.பிறவிப்பிணி வராது!...

தந்திரம் 81:

ஆணவத்தின் (Ego) வெளிப்பாடே அச்சம்.அச்சத்தின் வெளிப்பாடே எந்த ஆபத்தும் (Risk) தனக்கு வராமல் பாதுகாத்துக்கொள்ளும் பரபரப்பு.காதல் ஆபத்து என்றால் கல்யாணம் பாதுகாப்பு.காதலில் மனிதன் வாழ்கிறான்.கல்யாணத்தில் புத்துணர்வுமிக்க தன வாழ்வை இழக்கிறான்.எழுத்துக்கள் வார்த்தைகளில் நிரம்பும். வார்த்தைகள் பொருல்களில் நிரம்பும்.அணுக்கள் சுழன்று சுழன்று ... நெருங்கி நெருங்கி ... இறுகி இறுகி...

ஐம்பூதங்களாய் பரிணாமம் பெற்றது.அந்த உலகம்தான் உன் ஆணவம்.மீண்டும் அணுக்களாகப் பிரி... ஆண வத்திலிருந்தும் அச்சத்திலிருந்தும் விடுதலை ஆகு. அண்டத்தின் உணர்வாய் மாறு!...

தந்திரம் 82:

அலை அலையாய் வரும் எண்ணங்களை விடு.அந் தந்த உணர்வுகளை மாறு.உன் வார்த்தைகளாய் மாறு. உன் வார்த்தைகளால் உணர்வுகளைச் சிதைக்காதே. அமைதி என்ற ஆழ்ந்த மொழியே உணர்வுகள் வெளிப் படுத்தும் மொழி.நான் என்ற எண்ணத்தை விடு.என்னு டையது என்ற எண்ணத்தையும் விடு.உன் தேகத்தை யும் மனதையும் வெட்ட வெளியாக்கி பிரபஞ்சத்தின் சகல உணர்வுகளையும் உன்னுள் ஊடுருவ விடு! பிர பஞ்ச உணர்வு (Cosmic consciousness) பெறுவாய்!...

தந்திரம் 83:

நீல வானத்தில் மேக்ககூட்டம் ஊர்ந்து செல்வதுபோல் எண்ணங்களும் ஆசைகளும் உன்வழியே ஊர்ந்து செல்கின்றன.நீலவானம்... மேகங்களை 'நான்' என்று எண்ணுவது போன்றதே எண்ணங்களையும் ஆசைக ளையும் 'நான்' என்றும் 'என்னுடையது' என்னும் அறி யாமை.அந்த அறியாமையை விட்டு வெளியே வா.நீள வானமாய் நிலைத்து நின்று மேகங்களின் அசைவைப் போன்ற உன் வாழ்க்கை அசைவின் அழகை அனு பவி!...

தந்திரம் 84:

பற்றுகள் கயிறுகளாய் மாறி உன்னைக் கட்டிப்போடும் பற்றற்ற தன்மையே உன்னை விடுதலை செய்யும்.உன் விழிப்புணர்வைச் சிறிது உடலுக்குள் கட்டிப் போடா தே.பரந்த விழிப்புணர்வாய் மாற்றி விரித்துக்கொண்டே

செல்.எவ்வளவு விரிவடைந்தாயோ அவ்வளவு ஆனந்தத்தை அடைவாய்!...

தந்திரம் 85:

எண்ணமற்ற நிலையே தியானம்.சாதி, மதம், சமுதாயம், அரசியல் சார்ந்த எண்ணங்களைத் தூக்கிச் சுமக்காதே. தேவை முடிந்ததும் அவ்வப்போதே இறக்கி வை.எண்ணங்கள் இருக்கும் வரை நீ வாழ்க்கையின் மேல்தட்டில் மிதக்கிறாய்.எண்ணங்களிலிருந்து விடுதலை ஆனதும் வாழ்வின் ஆழத்திற்குச் செல்கிறாய்.அந்த சூழ்நிலையில்தான் உன் உண்மையான தியானம் தொடங்கும்.ஒருமுறை அந்த ஆழத்தை தொட்டுவிட்டு மேலே வந்தால் விடுதலை உணர்வை பெறுவாய்!...

தந்திரம் 86:

உன் மனம் என்ற வெண்பலகையில் எழுதப்பெற்றுள்ள சகல எண்ணங்களையும் துடைத்து மீண்டும் வெண்பலகை ஆக்கு.அத்தகைய மனதிற்கு பெயர்தான் வெள்ளைமனம்.அந்த மனத்தால் யார் மீதும் குறைகளை காண முடியாது.எதன் மீதும் விருப்பு வெறுப்பு கொள்ள முடியாது.எதைப்பற்றியும் அதிகமாய்க் கற்பனை செய்ய முடியாது.இவ்வாறு ஒரு மனம் எதையும் செய்ய இயலாத ஏகாந்த நிலைக்கு சென்றுவிட்டால் நீ சிவம் என்ற சிகரத்தை தீண்டப்போகிறாய் என்று அர்த்தம்!...

தந்திரம் 87:

அன்பு கனிந்த தேவி, 'நான் எனக்காக மட்டுமே பூமிக்கு வந்துள்ளேன்... எனக்காகவே வாழ்கிறேன்... என்னுள் நான் ஐக்கியமாய் இருப்பதில் நிறைவும் ஆனந்தமும் கொள்கிறேன்.என் வாழ்வு மற்றவர்களையோ, மற்ற பொருள்களையோ சார்ந்து அல்ல.பிறரிடம் பேச வேண்டிய தேவையும் இல்லை.என்னுடன் நானே பேச வேண்டிய தேவையும் இல்லை!' என்ற பூரண நிலையை எப்

பொழுது அடைகிறாயோ அப்பொழுதே நீ மைய புள்ளி யை(Neutral) அடைகிறாய்!...

தந்திரம் 88:

அறிபவன் 'Knower'... அறியும் பொருள் 'Known Objects'... அறிவு 'Knowledge'... இந்த மூன்று அம்சங் களுடன் வாழ்கிறாய்.அறிபவன் சிவம்... அறியப்பெறும் பொருள் சக்தி... வண்டிவண்டியாய் சேர்த்த அறிவுப்ப திவுகளே மாய உலகம்.சேர்ந்த அறிவை விட்டுவிட்டு... அறிபவனும் அறியும் பொருளும் ஒன்றாக தன்வயப்படு வதே சிவசக்தி ஐக்கியம்!

தந்திரம் 89:

அன்பே உருவமான தேவி, 'பூமியும் நானே... வானமும் நானே... நட்சத்திரங்களும் நானே... பால்வெளிமண்டல மும் நானே... உடலும் நானே... மனமும் நானே... அறி வும் நானே... ஆண்ட சராசரம் முழுமையும் நானே... என் அசைவே இந்த பிரபஞ்சத்தின் அசைவு!... இது போன்று தன்னிலிருந்து எந்த ஒன்றையும் பிரித்து உணராத பாவ னையின் வழியாகவும் ஒருவன் ஞான மலர்ச்சி பெற லாம்!...

தந்திரம் 90:

கண்கள் மனதைக் காட்டும் கண்ணாடி.பொய்யை வெளிப்படுத்த முடியாத புனிதமான உறுப்பு.80% வாழ் வைத் தீர்மானிக்கும் ஆற்றல் கொண்டது.உன் உள்ளங் கைகளால் மிக மிக மென்மையாக விழிக்கோளங்களை (Eye balls) தீண்டியபடி 25 நிமிடம் முதல் 40 நிமிடம் வரை மூடிக்கொண்டு கவனி.மென்மையான இந்தத் தீண்டல் பயிற்சி சில நாட்களில் உன் இதயத்தைத் திறக்கும். ஆண்ட சராசரத்தின் ஆற்றலை உணர வைக்கும்!...

தந்திரம் 91:

அன்பு மயமான என் தேவி,தேகம் ஏழு அடுக்குகளை கொண்டது.பிரணவ தேகம்(Etheric body) என்பது நீல வானம் போன்ற  உமிழ்வது.அதீத மின்சக்தி கொண்டது.கண்களை மூடி அணு அணுவாய் உன் உறுப்புகளை உணர்வுடன் கவனித்தபடி தியானத்தில் இருந்தால் முதலில் எடையற்ற தேகமாய் உன் தேகம் மாறும்.பிரணவ தேகம் நீல வண்ணத்துடன் வெளிப்பட்டு விரியும்... விரியும்... உள்ளும் புறமும் மேலும் கீழுமாய் நீக்கமற நிறையும்!...

தந்திரம் 92:

இதயம் என்பது உணர்வு மையம்.இரண்டற்ற நிலையில் இணைந்தே இருப்பது அதன் தன்மை.மூளை என்பது அறிவு மையம்.எப்பொழுதும் இரண்டாக... நான்காகப் பிரித்து ஆராய்ச்சி செய்தபடி இருப்பது அதன் தன்மை.இதயம் குழந்தைத் தன்மை உடையது.மூளை முதுமைத் தண்மையைச் சார்ந்தது.உணர்வுடன் லயப்பட்டு இரண்டற்ற நிலையில் நீ வாழ்கிறாய்.அறிவுடன் சேர்ந்து ஆராயும் பொழுதெல்லாம் வாழ்வை இழக்கிறாய்.இதயத்தில் மையம் கோல்.இளமையுடன் வாழ்வாய்!...

தந்திரம் 93:

மனம் எல்லைகளை உடையது... 'Formal'... உணர்வு எல்லைகளைக் கடந்தது... 'Universal' மனதை பயன்படுத்தி அதன் அறிவைப் பயன்படுத்தி எல்லையற்ற பேரின்பத்தை அடைய இயலாது.உன் உணர்வை விரித்து விரித்து சென்றால் உடல் கடந்த... மனம் கடந்த... அறிவு கடந்த நிலையை அடையலாம்.அப்பொழுதுதான் எல்லையற்ற பரம்பொருளுடன் இரண்டறக் கலப்பாய்.இறவாத நிலையை பெறுவாய்!...

தந்திரம் 94:

நோயாலும் வறுமையாலும் பிற துன்பங்களாலும் சீரழி வதற்கு சிவமாகிய நானோ சக்தியாகிய நீயோ காரணம் அல்ல.மனிதர்களின் தொடர்ச்சியான எதிர்மறை எண் ணங்களே காரணம்.தன் எலும்பும் தோளும் ரத்தமும் கேட்டு நோயுற்றதாகவும் தன்னை இருளும் இறப்பும் சூழ்வதாகவும் தொடர்ந்து ஒருவாரம் ஒருவன் பாவனை செய்தால் நோயுற்று இறந்துவிடுவான்.அதற்க்கு எதிராக எல்லாம் ஒளிமயமாகவும் ஆரோக்கியமாகவும் இளமை யாகவும் மாறி வருவதாக பாவனை செய்தால் அவ்வாறே மாறி விடுவான்.அவனவன் தலைவிதியை அவனவன் தான் தீர்மானிக்கிறான்!...

தந்திரம் 95:

உடலமைப்பைப் பொறுத்தவரை ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர் நிறைவு செய்யுமாறும் அவர்களுக்கி டையே உயிர் மின்சக்தி வட்டமாய்ச் சுழலும் வண்ண மும் வடிவமைக்கப்பெற்றுள்ளனர்.பெண்ணுக்கு மார் புக்காம்புகள் நேர்மின்வாய் 'Positive centre' யோனி யோனி முனை எதிர்மின்வாய்.பெண் தன மார்பகங்க ளின் மீதும், ஆண் தன் விந்துப்பை மீதும் முழுமையாக ஒருமைப்பட்டால்கூட முழுஞான விழிப்பையும் ஆற்ற லையும் உணரலாம்!...

தந்திரம் 96:

மரம், செடி, கோடி உட்பட எந்த உயிர் அசைவும் இல் லாத பாலைவனத்தை... பாறைப்படிவங்களை... மலை உச்சியை தேர்வு செய்து உட்கார். மனதிலிருக்கும் சகல உயிர்ப்பற்றுகளும் நீங்கும் வண்ணம் தனித்தனி யாய் இருந்து தவம் செய்.மனதின் எண்ணங்கள் மறைய மறைய மனதின் அழுத்தங்கள் குறையும்.முடிவில் மனம் காணாமல் போகும்.

தந்திரம் 97:

ஸ்தூல தேகம்... சூட்சும தேகம்... காரண தேகம்... மக காரண தேகம்... என மானிட தேகம் ஏழு அடுக்குக ளாய் விரிந்துகொண்டே செல்லும் தன்மை கொண்டது. பிற உயிர்களின் தொடர்பே இல்லாத தன்னந்தனிமை யில் மிக ஆழ்ந்து தன்னுள் வெட்ட வெளியை... பரிசுத்த வெளியை நிறைந்த பபிரபஞ்சமயம் ஆனவர்கள் அதை அடைவர்!...

தந்திரம் 98:

உனக்கு வசதியான நிலையில் அமர்ந்தோ... சாய்ந்தோ... படுதோ... தளர்வாய் இருந்துகொள்.கண்களை மூடி பாதம் முதல் உச்சிவரை உடலின் உணர்வுகளைக் கவனி.உடலில் எங்கேனும் இறுக்கத்தை உணர்ந்தால் மேலும் அதை மிக இறுக்கமாக மாற்றித் தளர்வடைய செய்.முகத்தை முடிந்தவரை இறுக்கமாக மாற்றி தளர்வு கொள்ளவை.பின்பு ஆனந்தமாய் உன் அக்குள் பகுதி யில் தொடங்கி நெஞ்சுப்பகுதி வரை ஆழ்ந்த அமை தியை உணர்ந்தபடி மனம் கடந்து செல்!...

தந்திரம் 99:

குறுகிய உடலும் குறுகிய மனமும் உன் குறைகளுக் கெல்லாம் மூல காரணம். உன் சகல பய உணர்வுக ளையும் பாதுகாப்பு உணர்வுகளையும் விட்டு வெளியே வா. அணைத்து தடைகளையும் உடைத்தெறி.ஆழ்வை யும் சாவையும் சமமாக மதி.சாகும் பொழுது இந்த உல கைப்பற்றியுள்ள உணர்வுகளை எப்படி இழக்கிறாயோ அதேபோல் வாழும்பொழுதே இழந்து பழகு.சமாதி... நிர் வாணம் என்பது சாதாரணமாகிவிடும்!...

தந்திரம் 100:

எப்போதும் உன்னை சுற்றியுள்ள மனிதர்களுடன் போராடுகிறாய் அல்லது பொருள்களுடன் போராடு கிறாய் அல்லது கடமைகளுடன் போராடுகிறாய்.உன்

னோடு நீ ஆனந்தமாய் என்றாவது இருந்துள்ளாயா?... ஞானி... தன்னோடு தான் ஐக்யமாய் இருந்தபடி இவற்று டன் போராடுகிறான்.அஞ்ஞானி இணைகளுடன் ஐக்கி யப்பட்டுப் போராடியபடி தன் ஆனந்த இருப்பை இழக்கி றான்.நீ ஞானியா, அஞ்ஞானியா என்பதை முடுவு செய்!

தந்திரம் 101:

ஈசனை 'எல்லாம் அறிந்தவன்... எல்லாம் வல்லவன்... எங்கும் நீக்கமற நிறைந்தவன்'... என்று உணர்ந்திருக்கி றாய்.அந்த உணர்வு உண்மையென நீ உலவுப்பூர்வமாய் நம்பும் பட்சத்தில் நீயும் அத்தகையவன் என்று உண ரத்தொடங்கு.பஞ்ச பூதங்களை எண்ணி அஞ்சாதே.கி ரகங்களை நினைத்துப் பயப்படாதே.எல்லாவற்றையும் உன்னுள் கிரகித்து விஸ்வரூபம் கொள் ! விஸ்வநாதம் கேட்பாய். விஸ்வரூப தரிசனத்தை உணர்வாய்!...

தந்திரம் 102:

கற்பனை... மனித இனத்திற்கு வழங்கப்பெற்ற ஓர் அசா தாரண சக்தி.கற்பனையே ஒரு மனிதனை உயர்த்துகி றது அல்லது வீழ்த்துகிறது.அந்த அதீத கற்பனா சக் தியை உன் ஞான விழிப்புக்கும் முக்திக்கு பயன்படுத்து. மனித தொடர்பு இல்லாத வனத்திலோ அல்லது மூடிய அறைக்குள்ளோ கற்பனையை பயிற்சி செய்.உடலை மற... மனதை மற... உணர்வுகளை மற... ஆண்ட சராசரத் தின் ஆற்றலை உன்னுள் நிரப்பு!

தந்திரம் 103:

'தட்டுங்கள் திறக்கப்படும்!' என்பது செயலால் ஈசனை அடைவது.'கேளுங்கள் கொடுக்கப்படும்!' என்பது சொல்லல் ஈசனை கேட்டு அடைவது. எண்ணுவதா லேயே ஈசனை அடைவது என்பது இருப்பதில் உயர்ந்த எளிதான வழி. உன் அன்பும் ஈசனின் அன்பும் இரண் டரக் கலந்தால்... உன் பண்பும் ஈசனின் பண்பும் இரண்

டராக் கலந்தால் அது நிகழும்.எண்ணமும் எண்ணுபவனும் தனித்தனியே இல்லாமல் ஒன்றாரக்கும்பொழுது அது நிகழும். உன் செயலும் ஈசனின் செயலும் ஒன்றாகும்!...

தந்திரம் 104:

என் இனிய சக்தி, உன் சகல கருத்துக்களும் லட்சியங்களும் கற்பனைகளும் கனவுகளும் நீர்மேல் மிதக்கும் குமிபோல் பேரண்டத்தில் கரைந்துபோகும். காணாமல் போகும். எந்த எண்ணமும் அற்ற... லட்சியங்களும் அற்ற... கனவுகளும் அற்ற... இருப்பு நிலையே நிரந்தரம்!... சத்தியம்!... என்பதை நீ உணர்வாயாக!

தந்திரம் 105:

அண்டத்தையும் உன்னையும் பிரிக்க முடியாது.அண்டமின்றி நீ கிடையாது.புல்லாகி பூடாகி புழுவாகி மரமாகி... என எத்தனையோ வடிவங்களைப் பிறவிகளை எடுத்துள்ளாய். அனால் அண்டத்தை விட்டு நீ விலகியதும் இல்லை.பிரிந்ததும் இல்லை.நானும் அண்டமும் ஒன்று என்ற உணர்வில் லயத்திரு .ஆண்டவனும் நீயும் ஒன்றாவீர்கள்!

தந்திரம் 106:

பிறரின் உணர்வுகளை உன் உணர்வுகளாக மாற்றப்பழகு.உயர்ந்த... மகிழ்ச்சியான உணர்வுகளை மட்டுமல்ல. கீழான... கஷ்டமான உணர்வுகளையும் உனக்குள் உள் வாங்கி அந்த உணர்வு மயமாகு.பார்வையற்றவர்களைப் பார்த்தால் பார்வையற்ற உணர்வைப் பெறு.ஊமையை பார்த்தால் ஊமை உணர்வை பெறு.நோயாளிகளை பார்த்தால் நோயாளிகளின் உணர்வைப் பெறு.அப்பொழுதுதான் பிறரைப் பிரகாசமாகவும் கேலியாகவும் நினைக்கமாட்டாய்.பேசமாட்டாய்.ஈசனின் ராஜபார்வையைப் பெறுவாய்!

தந்திரம் 107:

நீ காணும் சகல பொருள்களும் மூன்று நிலைகளில் உள்ளன.மேலோட்டமாய்ப் பார்த்தல் பொருள்... இன்னும் ஆழமாய் ஆராய்ந்தால் ஆற்றல்... அதையும் தாண்டி ஆழமாய் ஆராய்ந்தால் ஒளி!... அந்த ஒளியையும் தாண்டிச் சென்றால் உணர்வு மயம். அந்தப் பேரண்ட உணர்வு மையத்தை நோக்கிப் பிரயாணம் செய்!...

தந்திரம் 108:

உன்னை சரியாக வழி நடத்தும் ஒளி ஒன்று உன்னுள் உள்ளது.நிர்கதியாக நீ நிற்கும்பொழுது மட்டும் வழிகாட்டும் அந்த உள் ஒளியை ஆபத்தான முயற்சிகளில் இறங்கி 'risk' எடுத்துக் கண்டுபிடி.கும்மிருட்டில் யார் உதவியும் இன்றி அந்த ஒளியை நம்பிப் பயணம் செய். அடர்ந்த வனத்தில் அடுத்தவர் உதவியின்றி அதன் உதவியுடன் பயணம் செய்.அதுதான் ஈசன் உனக்கு அளித்துள்ள உண்மையான 'ஆண்ட இருப்பு வழிகாட்டி'! 'Universal positioning system'.

தந்திரம் 109:

தரையில்... சுவற்றில் எந்தப்பொருளும் இல்லாத வெறும் சுவர்களால் சூழப்பட்ட ஒரு தனி அறையில் அமர்ந்துகொள். முதுகுத்தண்டை நிமிர்த்தி வைத்துக்கொள். தளர்வாய்... இன்னும் தளர்வாய் உடல் உறுப்புகளின் உணர்வே அற்ற நிலைக்கு செல்.இதயம், நுரையீரல், கலீரல், மண்ணீரல் என்னும் சகல உறுப்புகளையும் மற.மனதை அடைத்துக்கொண்டிருக்கும் பெற்றோர்... மனைவி... கணவன்... காதலி... பிள்ளை... பேரன் என்னும் சகல கருமந்திரங்களையும் வெளியே வீசு. தோல் என்னும் சுவரால் மூடப்பட்ட வெறும் காலி 'empty' தேகமாக மாறு!

தந்திரம் 110:

அருள்மயமானவளே, அந்த ஆழ்ந்த அமைதியை... தூய வெறுமையை நீ உணர்ந்தபின் உன் மனதுடன் விளை யாடு.அதன் ஆசை விளையாட்டை ரசி.அற்பமான எண் ணத்தை அது உருவாக்கும்பொழுது ஆத்திரம் அடை யாதே. மிக உயர்ந்த எண்ணங்களை உற்பத்தி செய்யும் பொழுது, 'உலகை திருத்தவந்த உத்தமன் நான்!' என்று உணர்ச்சி வயப்படும் ஆணவமும் கொள்ளாதே .கள்ள மற்ற ஒரு குழந்தையின் விளையாட்டைப்போல் அதை ரசி!...

தந்திரம் 111:

இனிய இதயம் உடையவளே, 'எல்லாம் அறிந்துள் ளோம்' என்ற ஆணவத்தையும் விடு.'எதுவும் அறிய வில்லை' என்ற பேதைமை எண்ணத்தையும் விடு. அறிந்தும் அறியாத... உணர்ந்தும் உணராத... தூங்கி யும் தூங்காத... வாழ்ந்தும் வாழாத நடுநிலை உணர் வுக்கு வா.பிறப்பையும் தூக்கி வெளியே வை.இறப்பை யும் தூக்கி வெளியே வை.பிறப்பும் இறப்பும் நடுநிலை உணர்வில் நிலைத்து நில்!

தந்திரம் 112:

உண்மையோ பொய்யோ ஒரு துணையின் ஆதரவு இல் லாமல் மனித மனத்தால் வாழ முடியாது.அனால் இந்த அண்டமோ எந்த ஆதரவும் இல்லாதது. மேலேயோ... கீழேயோ... பக்கவாட்டிலோ எந்த ஆதாரமும் இதற்க்கு கிடையாது.அதுபோல் இதற்க்கு தொடக்கமும் கிடை யாது முடிவும் கிடையாது.ஆனால் உன் மனம்... பிறப்பு என்ற தொடக்கத்திலும் இறப்பு என்ற துக்கத்திலும் தொங்கிக்கொண்டுள்ளது.எந்த அசைவும் அற்ற ஏகாந் தமான ஆழ்ந்த அமைதியே இதன் இருப்பு நிலை. புற ஆதரவை விடு.பிறப்பு இறப்பை மற.ஏகாந்த அமைதி

யில் என்னுடன் அசைவற்று நில்! இழந்த சொர்க்கத்தை மீட்பாய்!